*K̲umaran̲*

*Āram 2, muttu 12*

*November 12, 1924*

Record no. 313

Registered No. M. 1823.

உ சிவமயம்.

"KUMARAN" Karaikudi.




" என்கடன் பணிசெய்து கிடப்பதே."

( வாரப் பதிப்பு. )

புதன்கிழமை தோறும் பிரசுரமாகும்.

" ஆலயந் தொழுவது சாலவு நன்று. "

" திரைகட லோடியுந் திரவியந்தேடு."

ஆரம். உ } காரைக்குடி, ரக்தாக்ஷிஸு ஐப்பசிமீ உஎ௳ (12-11-24) { முத்து கஉ

## அறிவும் மகளிரும்.

அறிவு ஆடவர் பெண்டிர் அனைவருக்கும் இருக்கின்றது. அவ்வறிவை விருத்தி செய்ய வேண்டியது எல்லோருக்குமுரிய கடனும். அறிவு வளர்ச்சி ஆடவர்க்குத்தான் உரியது; பெண்டிர்க் குரிய தல்ல என்ற வேறுபாடு இல்லை. அறியாமல் பாமர ஜனங்கள் பெண்மக்கள் கல்வி கற்கக் கூடாதென்ப் புலம்புகிறார்கள். அறிவு வளம் பெறாத மக்கள் விலங்குகளுக்கு ஒப்பாவார்கள். அறிவிலாதவருடைய கண்கள் புண்களேயாம். கல்வியறிவில்லாதாருடைய கண்களுக்கு எல்லா அறிவு நூல்களும் ஏதோ கிறுக்கப்பட்டிருப்பது போலவே புலப்படும் எழுத்து வாசனையற்றபெண்மணிகள் அறிவு நூல்களைக் கையினால் தொட இயலாத குருடராகவே விளங்குகின்றார்கள். கல்வியறிவிலாக் குறையினாலேயே மக்கள்பலர் கண்ணிருந்தும் குருடராக இலங்குகின்றார்கள்.

* *

கல்வியறிவின்மையினால் பெண்மக்களுக்கு நன்றாகப் பேசத் தெரியவில்லை. கொச்சையாகவே நீட்டி நீட்டிப்பேசுகின்றார்கள். அவர்கள் பேசும் சொற்களில் பாதி தமிழ்ச் சொற்களாகவே புலப்படவில்லை. ஒரு கடிதத்தையோ, ஒருநல்ல விஷயத்தையோ வாசித்து அறிந்து கொள்ள வியலாத பெண்மக்கள் வீடுவீடாக அலைந்து படிக்கச் சொல்லிக் கேட்டுத் தெரிந்து கொள்ளுகிறார்கள். சிலதோத்திரப்பாடல்களைப் பயில விரும்பினாலும் எழுத்து வாசனை யின்மையினால் நாவினால் எழுத்துக்களைச் சுத்தமாக ஒலிக்க வியல வில்லை. இதனாலேயே பெண்மக்கள் தங்களைத் தாமே, " மடஜென்மங்கள் " என இகழ்ந்து கொள்ளுகிறார்கள். இவ்வளவு தூரம் அவர்கள் தம்மைத்தாமே இகழ்ந்து கொள்ளும் வண்ணம் நாம் அவர்களை அடிமைகளாக்கி விட்டோம். ஆனால் நாமும் அயல்நாட்டினர்க்கு அடிமைகளாகவே யிருக்கின்றோம். நமக்கு அடிமைகளாகப் பெண்மக்கள் இருக்கின்றார்கள். அஃதாவது அடிமைக் கடிமைகளாக அவர்கள் விளங்குகிறார்கள். பெண்மக்களை அடிமைகளாகப் பாவிக்கும் வரையில் நம்முடைய நாட்டில் ஒருவிதமான முன்னேற்றமும் தோன்றாது.

* *

அடிமைப் பெண்டிரால் வளர்க்கப்படும் பிள்ளைகளும் அடிமைகளாகவே இலங்குகின்றார்கள். அடிமை வாழ்வு தொலைந்தாற்றான் இன்ப வாழ்வு அரும்பும். 'பெண்மக்கள் கல்வி கற்கக்கூடாது!' எனப் புலம்புவோர்பால் ஒரு நாளும் இன்பவாழ்வு உண்டாகாது! அறிவில்லாத பெண்மக்களால் குடும்பங்களில் நேரிடும் தொந்தரவிற்கு ஓர் அளவில்லை. "நகை செய்ய வேண்டும்; பொருள் சேகரிக்க வேண்டும்; பணங் கொண்டு வா; இல்லாவிட்டால் சாப்பாடு கிடைக்காது" என்று அறிவில்லாத பெண்மக்கள் நாயகனுடைய வருவாய் நிலையை உணராது, ஆடம்பரமாக அதிகச் செலவு செய்ய எண்ணி அவனைப் படுத்தும் துன்பத்தை நம்மால் வருணிக்க முடியாது. கல்வியறிவில்லாத பெண்மக்களிற் பலர் மிருகங்களைப் போலவே நடந்து கொள்ளுகின்றார்கள். அறிவு விளக்க மின்மையால், மிக மூடர்களாக விருக்கின்றார்கள். அம் மூட சிகாமணிகளோடு வாழ்க்கை நடத்துவது பெருந்துன்பமே யாம்.

* *

படிப்பில்லாத பெண்மக்களுக்குப் பிள்ளைகளின் அறிவைப்பண்படுத்தும்முறையே தெரியவில்லை. பிள்ளைகளின் வயிற்றில் பலகாரம், சோறு முதலியவற்றை வைத்து அடைக்கத்தான் அவர்களுக்கு நன்றாகத் தெரிகின்றது. அவர்கள் கையில் வளரும் பிள்ளைகள் மிருகங்களாகவே வளருகின்றன. அறிவுடை மகளிர்கரங்களில் வளரும் பிள்ளைகளுக்கும் அறிவிலார் கரங்களில்வளரும் பிள்ளைகளுக்கும் அதிகமான வித்தியாசம் இருக்கின்றது. பலவகையான தேசங்களையும் தொழில் முறைகளையும் வேறு பல ஆராய்ச்சிகளையும் உணரத்தக்க உலகஞானமில்லாத பெண்மக்கள் பொம்மைகளுக்கு ஒப்பாகவே விளங்குகிறார்கள். கிணற்றுத் தவளைகளைப் போல் அவர்கள் அறிவுக்கு எட்டியதைக் கூறி, அகன்ற அறிவுடைய நாயகனையும் அவர்களுடைய குறுகிய அறிவின் வழியே நடக்கும்படி கட்டாயப்படுத்தித் துன்புறுத்துகிறார்கள். இதனாலேயே குடும்பங்களில் நாயகனுக்கும் நாயகிக்கும் அதிகமான ஒற்றுமைக் குறைவு உண்டாகின்றது.

* *

நாயகனும் நாயகியும் ஒன்றுபட்ட மனமுடையவர்களாய் காதலுடையோராய் வாழவேண்டுமானால் இருவரும் அறிவுடையோராய் இருத்தல் வேண்டும். இன்றேல் ஒரு நாளும் நல்வாழ்வு வாழ முடியாது. எப்பொழுதும் இருவருக்கும் சண்டை சச்சரவுதான் உண்டாகும். படிப்பதனால் பெண்மக்கள் கெட்டுப் போய்விடுவார்கள் என்ற மூடத்தனமானது ஒழிந்து போகவேண்டும். கெட்டுப் போவதென்பது படியாதவர்களிலும் உண்டு. நாயகனுக்கும் நாயகிக்கும் சிறந்த காதல் இருக்குமானால் ஒருவரும் கெட்டுப்போக மாட்டார்கள். காதலில்லாவிட்டால் யாராவது கெட்டுப் போதல் கூடும். படிப்புக்கும் இதற்கும் யாதொரு விதமான தொடர்பு மில்லை. கத்தியானது இனிய பழங்களை நறுக்கி உண்டற்கும் உதவும்; கரங்களை அறுத்து வருத்திக் கொள்ளுதற்கும் உதவும். இவ்வாறே அவரவர் தத்தம் மனத்திற் கேற்றவாறு தங்களை நல்

ல் வழியிலே செலுத்திக் கொண்டாலும் செலுத்தலாம்; தீயவழியிலேபோக்கிக்கொண்டாலும் போக்கலாம். இஃது அவரவர் நிலையைக் கொண்டு நிச்சயிக்கத் தக்கதே யொழியக், கல்வியைக் கொண்டு நிச்சயிக்கத் தக்கதல்ல. மேலும் கல்வியின் நன்மை தீமையை அகற்றி நன்மையைத் தோற்றுவித்தலே யாகும்.

*                    *

எவ்விதமான நாகரிகம், திருத்தம் ஏற்பட வேண்டுமென்றாலும், மகளிர் அறிவு வளர்ந்தாற்றான் அவைகள் உரம்பெற்றோளிர்தல் கூடும். எவ்வாற்றானும் பெண் கல்வி யவசியமானதே யாம். பெண் கல்வியவசியமில்லை யென்போரைப் பைத்தியக்காரர் என்றுதான் இயம்புதல்வேண்டும். பெண்கல்வி நம்முடைய நாட்டிற்குப் புதியதொன்றல்ல. பண்டைநாளில் நம்முடைய நாட்டில் பெண்கல்வி நன்றாகவே பரவி யிருந்திருக்கின்றது. கம்பநாட்டாழ்வார் அயோத்திமாநகரத்தை வருணிக்கும் பொழுது, 'அந்நகரத்திலுள்ள பெண்மக்களனைவருக்கும் கல்வியும்செல்வமும் நிறைந்திருந்ததால் அன்னார் ஈதலையும் விருந்தோம்பலையும் சிறப்புற நடர்த்தினர்கள்' என்று நவில்வதால் நாம் அக்காலத்தில் பெண்கல்வி இனிது பரவியிருந்த தென்பதை நன்கு உணரலாம். அப்பாடல் வருமாறு.—

பெருந்தடங் கட்பிறை நுதலார்க்
கெல்லாம்
பொருந்து செல்வமும் கல்வியும்
பூத்தலால்
வருந்தி வந்தவர்க் கீதலும்
வைகலும்
விருந்து மன்றி விளைவன
யாவையே.

*                    *

பண்டைநாளில் பல பெண்மணிகள் புலவர் திலகர்களாகப் பொலிவுற்றிருந்திருக்கின்றார்கள். அருந்தமிழ் மூதாட்டியாராகிய ஔவையார், அற்புதத் திருவந்தாதி பாடிய பொற்புடைப் புனிதவதியாராகிய காரைக்காலம்மையார், அமிழ்தினுமினிய தமிழ்ப்பாமாலைகளை மொழிந்தருளிய ஆண்டாள், வெள்ளிவீதியார், காக்கைபாடினியார், நச்செள்ளையார் முதலிய பெண்ணருங்கலங்களின் புலமை நம்மால் வருணிக்குந் தரத்ததோ? இவர்கள் பாடியதாக புறநானூறு அகநானூறு முதலிய பழந்தமிழ் இலக்கியங்களிற் காணப்படும் பாடல்கள் எத்துணை பொருட் செறிவும் சொன்னயமும் பொருந்தி யுள்ளன! கல்விக்கரசியும் அறிவுக் கடவுளுமாகிய கலைமகளே பெண்பாலாக இருக்கும் பொழுது பெண் மக்கள் கல்வி கற்றற் குரியரல்லர் என்பது எள்ளளவும் பொருத்தமற்ற பேச்சேயாம். பெற்றோர்கள் பெண்குழந்தைகளையும் அவசியம் கலாசாலைகளுக்கு அனுப்பிக் கல்வி புகற்றுவிப்பாராக! மகளிர்பால் அறிவு [illegible] விளங்குவதாக!

[illegible] பக்தன்.

## ஜில்லா கெஜட் சாரம்.

பூலாங்குரிச்சியில் சென்ற வருஷம் செப்டம்பர் மாதத்தில் பரீட்சார்த்தமாக ஒரு வருஷத்துக்கு ஏற்படுத்தப் பட்டிருக்கும் கால்நடை யடைப்பு (பவுண்டு) சாஸ்வதம் செய்யப் பட்டிருக்கிறது.

மிக எளிய குடிகளுக்கு வீடுகட்டிக் கொள்ள மனைகள் ௨0 செண்டுக்கு மேற்படாமல் தீர்வை விதிக்கப்பட்ட காலி நிலங்களிலிருந்து கொடுக்கப் படும்.

அநுமதிப்பத்திரத்தில் (லைசென்ஸ்) குறிப்பிட்ட பிரயாணிகளுக்கு அதிகமாக வாடகை மோட்டார் வண்டிகள் ஏற்றிச் செல்லப்படாது. வாடகைக்காக ஓடும் மோட்டார்கார்களை விற்கும் போதாவது குத்தகை விடும்போதாவது இருதரப்பாரும் கைமாறிய ஒரு வாரத்துக்குள் ஜில்லா போர்டு தலைவருக்கு அறிவிக்க வேண்டும். மீறி நடப்போர் ரூ ௫0 அல்லது தடவை ஒன்றுக்கு ரூ ௧0 வீதம் அபராதம் விதிக்கப்படுவர். இந்த விதிகள் சம்பந்தமாய் ஏதேனும் ஆட்சேபனை திருத்தங்கள் அக்டோபர் முடிவிற்குள் தெரிவிக்கா விட்டால் உறுதி செய்யப் படுமென்று அறிவிக்கப் பட்டிருக்கிறது.

இனி ஏற்படும் தொழிற்சாலைக் கட்டிடங்களுக்குச் ஜில்லா போர்டாரால் சில நிபந்தனைகள் ஏற்படுத்த உத்தேசிக்கப் பட்டிருக்கின்றது. அந்நிபந்தனைகளில் ஏதாவது திருத்தங்கள் செய்ய வேண்டி யிருந்தால் அக்டோபர் மாதம் முடிவிற்குள் தெரிவிக்க வேணுமென்று ஒரு அறிக்கை வெளியாகி யிருக்கிறது.

## நகர பரிபாலன சபைகளின் கணக்குப் பரிசோதனை.

இம்மாகாணத்தில் அ0 நகர பரிபாலன சபைகளுள. இவற்றின் வரவு செலவு கணக்குகளைப் பரிசோதிப்பதற்கு அரசாங்கத்தார் பல உத்தியோகஸ்தரை வைத்திருக்கின்றனர். ௧௯௨௨-௨௩ ஆண்டு கணக்குகளைப் பரிசோதித்து வெளியிட்டிருக்கும் அரசாங்க அறிக்கை சென்ற அக்டோபர் மாதத்தில்தான் வெளியாகி யிருக்கிறது.

அ0 நகர பரிபாலன சபைகளில் ௧௬ சபைகளே கணக்குகளைச் சரிவர, அரசாங்கத்தார் ஒப்புக் கொள்ளும்படியாக, வைத்துக் கொண்டிருந்தன. ௨௫ சபைகளின் கணக்குகள் திருப்திகரமா யிருக்க வில்லை. இவற்றில் சைதாப்பேட்டை, பெத்தாபுரம், இராஜமகேந்திரவரம், பெஜவாடா, கொச்சி, நெல்லூர், நாகபட்டணம், திருவாலூர், திருச்சி, விஜயநகரம் ஆகிய ௧0 நகர சபைகளின் கணக்குகள் மிகுந்த [illegible] யிருந்தனவாம். பரிசோதகரின் ஆட்சேபங்களுக்குச் சமாதானம் சொல்லாமல் காலங் கடத்தி வந்த ௩௨ நகர சபைகளில் இராஜமகேந்திரவரம் சபையே ௩௬௧ ஆட்சேபங்களுடன் முதன்மையாய் நின்றது. இந்த விஷயத்தில் நகர பரிபாலன சபைகள் அசிரத்தையா யிருப்பதைப் பற்றி அரசாங்கத்தார் மிகவும் வருந்துகின்றனர். வரி விதிப்பதில் விதிகளுக்கு மாறாக அநேக நகர பரிபாலன சபைகள் நடந்து கொண்டன. நகர பரிபாலன சபை யங்கத்தினரிற் சிலரே தங்களுக்கு ஏற்பட்ட வரியைச் செலுத்தவில்லை. வரிச் செலுத்தாதவரிற் சிலரையும் வாக்காளர் ஜாப்தாவில் சேர்ந்திருப்பது சட்டத்துக்கு விரோதமானது. நகர சபைகளின் பணம் பல விடங்களில் மோசம் செய்யப் பட்டிருக்கிறது. இதற்குக் காரணம் மேற்பார்வைக் குறைவேயாம். பல சபைகள் கடன் பட்டிருக்கின்றன. மற்றும் கையிருப்பில்லாமல் வரவுசெலவுகளைச் சரிக்கட்டி யிருக்கின்றன.

## இந்தியாவில் மலேயா ரப்பரைப்பற்றிய பிரசாரம்.

மலாய் நாட்டுச் சட்டச்சபை அங்கத்தினராகிய கனம் பி. கே. நம்பியார் என்ற இந்தியர் ஐக்கியமலாய் நாட்டு ரப்பர் பிரசார சபையின் வேண்டுகோளுக்கிணங்கி இந்தியாவில் ரப்பர் பிரசாரம் செய்வதற்கு வர விருக்கிறார். அவர் இந்தியா முழுவதும் சுற்றி வருவாராம். இந்தியாவில் தோலை உபயோகிப்பதில் பொதுவான வெறுப்பு இருப்பதால், மிதியடிகளும், பிரயாணப் பைகளும் இன்னும் பலவகைப் பொருள்களும் ரப்பர் மிகுதியாக உபயோகப்பட இடமுண்டு என்றும் இந்தியாவிலேயே, அவசிய மானால் மலாய் நாட்டு அரசாங்கத்தாராலேயே, ஒரு ரப்பர் தொழிற்சாலை ஏற்பட வேண்டி யிருக்கு மென்றும் கூறினார். மலாய் நாட்டில் ரப்பர் தொழில் நடைபெறு மிடங்களுக் கெல்லாம் சென்று மாதிரிப் பொருள்கள் எடுத்துக் கொண்டு வருவாராம். மூன்று மாதங்களுக்குக் குறையாமல் ஆறு மாதங்கள் வரையில் இந்தியாவில் கனம் நம்பியார் சுற்றுப் பிரயாணம் செய்வாராம். மாதமொன்றுக்குரூபாய் ௩,000 சம்பளமாகவும் தனக்கும் கூட வரும் தன் சகோதரருக்கும் செலவுக்கான தொகையும் ரப்பர்பிரசார சபையாரால் கொடுக்கப்படுமாம்.

### லோயர் பேரா
## இந்திய சங்கம்.

தெலுக் அன்சனி லுள்ள லோயர் பேரா இந்திய சங்கத்தின் சொந்தக் கட்டிடத்துக்கு அஸ்திவாரக் கல் இந்திய அரசாங்க ஸ்தானிகராகிய கனம் ராவ்சாகிப் டி. அருளானந்தம் பிள்ளையவர்களால் சென்ற அக்டோபர் மாதம் ௧அ-ம் தேதி நாட்டப்பெற்றது. அப்போது கனம் பிள்ளையவர்கள் மலாய் நாட்டு இந்தியர்களுக்கு அறிவுறுத்தத் தக்க ஒரு பிரசங்கம் புரிந்தனர். கட்டிடத்துக்கு நிலம் ஸ்ரீமான் கண. உ. வெ. வெள்ளையப்ப செட்டியா ரவர்களால் மிகச் சொற்ப விலைக்குக் கொடுக்கப் பெற்றது.



# கதைப் பகுதி

## கூழை ரங்கன்.

(முன் தொடர்ச்சி.)

இந்தக் கூட்டத்தார் இல்லாவிட்டால் இறந்து போனவருடைய ஆன்மா மோக்ஷமடையா தென்று குருட்டு ஜனங்கள் நம்பிக் கொண்டிருந்தனர். அதனால்தான் அந்தக்கூட்டத்தார் மானத்தை விட்டுப்பல்லைக்காட்டிப் பரக்க விழிப்பதைத் தொழிலாகக் கொண்டனர். பாவம்! அறிவென்பதே இல்லாமல் எப்படியாவது தப்பான புகழ்ச்சி செய்து பொய்யும் புரட்டுஞ் சொல்லி வயிறு வளர்ப்பதற்கு வந்திருந்த அக்கூட்டமானது பார்ப்பவருக்கு அருவருப்பையேதந்தது. மோக்ஷ கர்த்தாவான பஞ்சாங்கக்காரர் முதல் யாவரும் தலை முழுகவில்லை. சிலர் பல் துலக்கவுமில்லை. சிலர் விபூதியை மட்டுங் குழைத்துப் பூசிக்கொண்டிருந்தனர். பலருடைய முகத்தில் அருளென்பதே தோற்றவில்லை. பகல் மணி ஒன்றாகி விட்டது. அப்பொழுது பல் துலக்காமல் பொறுமை நிறைந்த முகத்தோடு நிற்கிற கூட்டத்தை அதிகாரத்தோடு விலக்கிக் கொண்டு, உள்ளிருந்த பிராமணர்கள் வெளியே வந்தனர். அவர்கட்குப் பின்னர் ஓலைப் பெட்டிகளில் கணக்கற்ற சாமான்களை வேலையாட்கள் தூக்கிக் கொண்டு சென்றனர். இதனைக் கண்டு வெளியிற் கூடிக்கிடந்த கூட்டத்தார் மொறு மொறுத்து முனங்கிக் கொண்டும் வீட்டுச் செட்டியாரை மெதுவாகத் திட்டிக் கொண்டும் நின்றனர். உள்ளே யிருந்த யாவரும் மகிழ்ச்சியோடு மூட்டைகளைக்கட்டிக் கொண்டு சென்று விட்டார்கள். பஞ்சாங்கம் சுப்பண்ணாவும் இரண்டு வண்டி நிறையுச் சாமான்களை யேற்றிக்கொண்டு புறப்பட்டு விட்டார். புகையிலை ராமண்ணா வெளியில் வந்து "சரி எல்லாரும் சென்று ஸ்நானம்செய்து ஆகாரம் செய்து கொண்டு மூன்று மணிக்குக் கோவிலுக்குப் பக்கதில் செட்டியாரவாளுடைய தோட்டத்திற்கு வந்து சேர வேண்டியது" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார். பிராமண போஜனம் மிக விமரிசையாக நடை பெற்றது. அன்று சுமார் ஆயிரத்தைநூறு பேர்வழிகட்கு லட்டு ஜிலேபியுடன் சாப்பாடுபோடப்பட்டது. சிலர் ஸ்நானம் செய்து சாப்பிட்டார்கள். சிலர் அதனை லக்ஷியம் செய்யவில்லை. ஆனால் ஸ்நானம் செய்யாததற்குத் தக்க காரணம் சொன்னார்கள். ஒருவர் "உடம்பு சௌகர்யமில்லை" என்றார். மற்றொருவர் "இனிமேல் பூரி வாங்க வேண்டுமே, அங்கே இடிக்கிற இடி யெல்லாம் இடித்து முடிந்த பின் ஒரே முழுக்காக முழுகிவிடலாம்" என்றார். வேறொருவர் "சூத்திரான்னமல்லவா? உண்டபின்தான் ஸ்நானம் செய்ய வேண்டும்" என்றார். இப்படியாகப் பேசிக் கொண்டு மூக்குப் பிடிக்கத் தின்று தீர்த்தார்கள்.

பகல் மணி இரண்டரை இருக்கலாம். அவ்வூர் சிவன்கோவிலுக்குப் பக்கத்திலுள்ள பெரிய கோட்டைச் சுவரெடுக்கப்பட்ட தோட்டத்தின் வாயிலில் பிராமணக் கூட்டமானது சூழ்ந்து கொண்டிருந்தது. வரவர அதிகரித்துக் கொண்டிருந்தது. இந்தத் தோட்டம் பிரபு ரங்கனுதன் செட்டியாருக்குச் சொந்தமானது. வெளிச்சுவர் சுமார் மூன்று கஜ உயரமெடுக்கப்பட்டிருந்தது. வழுவழுப்பாகச் சாந்து பூசப்பட்டுச்சுவரின் மேற்பாகத்தில் உடைந்து போன பீங்கான் சில்லுகள் பதிக்கப்பட்டிருந்தன. இதனுள் பங்களா கட்டவேண்டு மென்று பிரபு உத்தேசித்திருக்கிறார். சரியாக மூன்று மணிக்குப் பஞ்சாங்கம் சுப்பண்ணாவும் புகையிலை ராமண்ணாவும் அந்தத் தோட்டத்தின் வாயிற்படியில் நின்றார்கள். உட் புறமாகக் கதவின் ஓரத்தில் மங்கலம்பட்டிச் சின்னகருப்பன் நின்றான். வெளியிலிருந்த கூட்டத்தில் நின்றவரை பணத்தைக்கொடுத்து ஒவ்வொருவராக உள்ளே விட்டார்கள். உள்ளே சென்றவர்களில்,

ஒருவர்:—ராமு! முழுமையும் கொடுத்து முடிவதற்கு ஆறு மணிக்கு மேலாகும்போ லிருக்கிறதே! என்னடா செய்கிறது?

மற்றவர்:—வெற்றிலை பாக்குப் புகையிலை அரை ரூபாய்க்கு வாங்கி வந்திருக்கிறே னென்பது தெரியாதா? அதனை யொருகை பார்க்க வேண்டியது தான்.

வேறொருவர்:—சரியான மேசை கொடுப்பதானால் என்னிடத்தில் குட்டைப் புராணமிருக்கிறது, வேண்டுமா?

முதலாமவர்:—நீதாண்டா சரியான பேர்வழி. "வரு முன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர், வைத்தூறு போலக் கெடும்" பரம்பரையாக, ஆண்டியா பஞ்சத்துக்கு ஆண்டியா? எடேண்டா?

என்று சொல்லிக்கொண்டே மேல் வேஷ்டியைத் தரையில் விரித்தார். உடனே இன்னும் நால்வர் வந்து சேர்ந்தனர். ஒரு ரூபா மேசை வைத்து ஆட்டத்தை ஆரம்பித்து விட்டார்கள். இம்மாதிரி

யாக சீட்டுக்கச்சேரி பலவிடங்களில் நடைபெற்றது. விளையாடுபவர் ஐவர், அதை மேற்பார்ப்பவர் இருபது பேர். இப்படிப் பலமான சிரிப்புடனும் வசை மொழிகளுடனும் அடி உதையுடனும் இக்கோஷ்டிகள் நடைபெற்றன. வேறு பலர் பதினைந்து நாயும் புலியும் ஆடினார்கள். வேறு சில பேதைகள் ஆங்கு வந்திருந்த அழகிய பெண்மக்களைப் பார்த்து வாயைத்திறந்து கொண்டிருந்தனர். காதற் பேச்சுகள் மலிந்திருந்தன. இப்படியாக அவரவருடைய இயற்கைக்கும் பழக்கத்துக்கும் தக்கபடி காரியங்களை நடத்திக் கொண்டிருந்தனர். பூரி கொடுக்கும் சட்டப்படி கல்யாணம் செய்யப் பெற்ற புருஷர்கட்கு இரண்டு ரூபாவும் பெண்மக்கட்கு ஒரு ரூபாவுங் கொடுக்கவேண்டும். ஆனால் வயது முதிர்ந்த பெண்களிடமே இச்சட்டம் அமுலிலிருந்தது. ராமண்ணாவுக்கு வேண்டியவர்கள் க நிறையப் பணம் பெற்றார்கள். இதைக் கண்டு வெளியில் நின்ற கூட்டம் முறுமுறுத்துக் கொண்டிருந்தது. இப்பொழுது உள்ளிருந்த ஒரு குண்டுக்கட்டைப் பிராமணன் கோட்டைச் சுவரில் ஏற முயன்றான். கீழே ஒருவன் அவனைத் தன் தோளைக் கொடுத்து ஏற்றினான். சுவரில் பதிக்கப்பட்டிருந்த பிங்காளை ஒரு வெள்ளைக் கல்லினால் தட்டி உடைத்து விட்டு ஏற்கனவே இதற்கெனக் கொண்டு வந்திருந்த சாக்கொன்றை அதன்மேல் விரித்துக் கொண்டு ஏறி விட்டான்... சுவரின் மேலிருந்த பிராமணனைக் கண்டு விட்டான் நமது சின்னக் கறுப்பண்ணன். பக்கத்திற் கிடந்த கல்லொன்றையெடுத்து பலமாகச் சுவற்றின் மேலுள்ள ஆளைக் குறிவைத்து விட்டான்! ஐயோ! ஐயோ என்று கதறிக் கொண்டு பிராமணன் வெளிப்பக்கத்தில் தான் குதித்தான். உடனே வெளிக்கதவைச் சாத்திப் பூட்டிக் கொண்டு ராமண்ணா உள்ளே வந்தார். விசாரணை நடைபெற்றது. வெளியே போனவன் யாரென்று தெரியாதவரையில் பூரி கொடுக்க முடியாதென்று சொன்னார். வெளியிலே நிற்கிறவர்களுக்குள் பேரிரைச்சல் உண்டாகி விட்டது. உள்ளே இருக்கிறவர்கள் என்ன செய்வார்கள்? பாவம்! பகல் மூன்று மணி முதல் ஆறுமணி வரை அடைக்கப்பட்டுக்கிடக்கிறார்கள். இந்த வழக்கு எப்பொழுது தீருமென்று தெரியாமல் ஆண்களும் பெண்களும் ஒன்றாக அடைக்கப்பட்டிருப்பதால் அந்தக் கூட்டம் பட்ட கஷ்டம் சொல்ல முடியவில்லை. ஜனங்கள் மறுகுகின்றனர். ராமண்ணா தெரிந்தாலன்றி முடியாதென்று சொல்லிவிட்டார். பிறகு வெளியே போனவர் அடிபட்ட படியால் நடக்க முடியாமல் வீட்டிலிருக்கிறாரென்று சொன்னார்கள். பின்னர் பாக்கிப் பேருக்குப் பூரி கொடுக்கப்பட்டது. இரவு எட்டரை மணிக்கு யாவரையும் திறந்துவிட்டார்கள். ஒரு காலித் தோட்டத்தில் ஆண்களையும் பெண்களையும் இரவு எட்டரை மணிவரை அடைத்து வைத்தால் என்ன விளையுமென்பதை யறியாமல் மூட மக்கள் பூரி கொடுத்துப் புண்ணியம் சம்பாதிக்க நினைக்கின்றனர். இந்தப் பிராமணரிற் சிலர் இப்படி அடைபடுவதற்குப் பதிலாக மண்வெட்டி வயிறு வளர்ப்பதுகூட மேலாயிருக்குமென்று சொல்லிக்கொண்டே போனார்கள்.

---

## திருச்செந்தூர்.

ஐப்பசி மீ ௨௪ யன்று ஷஷ்டியுற்சவம் மிக நன்றாக நடைபெற்றது. திருநெல்வேலிக்கும் இவ்வூருக்கும் அதிகமாக ரயில் வண்டிகள் விடப்பட்டது கணக்கற்ற ஜனங்கள் வருதற்கு ஒருவாறு சாதகமாகவிருந்தது. எனினும் ரயிலில் வழக்கம் போல் இடமின்றி நின்று கொண்டே வந்தனர். முருகன் திருச்சந்நிதியில் இரவு பகலாக இருந்து கொண்டிருந்த ஜனக்கூட்டம் சொல்லுந் தரத்ததன்று. ஷஷ்டியன்று மாலையில் சுமார் ஐந்து மணிக்குக் கடற் கரையில் பதினாயிரம் ஜனங்கட்கதிகமாகக் கூடியிருந்தனர். மிகுந்த பக்தி சிரத்தையோடு கூடிய அக்கூட்டமானது எல்லையற்ற இன்பம் பயப்பதாகவிருந்தது. அங்கு ஜாதி பேதமின்றி எல்லா வகுப்பாரும் ஆண் பெண் குழந்தை குட்டிகள் யாவரும் ஒன்றாகப் பரந்து நின்ற காட்சி மனதிற்கு ஆனந்தத்தை யளித்தது. பின்னி யெழுந்து வெண்ணுரை காட்டித் தலை நிமிர்ந்து பேரிரைச்சலிட்டுக் கரையில் மோதித் திரும்பும் கடலலையும் மாலை நேரமும் மக்களது ஒரு முகமான தோற்றப் பொலிவும் நாகசுர வாத்தியமும் உள்ளத்தை யுருக்கின. சூரன் உடலற வேலை விடவல பெருமான் முருகன் திருக்கோலச் சிறப்பு இன்பே யுருவா யிலங்கியது. மாலை ஆறு மணிக்கு சூரசம்மாரம் செய்து முடிந்தது. புஷ்ப விமானத்தில் முருகக் கடவுளின் காட்சியைக் கண்டு மக்கள் ஆனந்தித்தனர். தென்னாட்டில் சூரசம்மார வைபவத்தில் சிறப்பாக நடத்தப் பெறுவது திருச்செந்தூரே யாகுமென்று கூறுவது உண்மையாகும். நாட்டுக்கோட்டையாரில் சுமார்ஐம்பது ஆண்மக்களும் நூறு பெண் மக்களும் வந்திருந்தனர். நகர விடுதி வசதிக் குறைவா யிருப்பதால் பலர் பல இடங்களில் ஜாகையமைத்துக் கொண்டிருந்தனர். என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

---

## ஒரு பேர் பெற்ற கொள்ளைக்காரன்.

ஐரோப்பா கண்டத்தில் பல்கேரியா நாட்டில் கொள்ளைக்காரரின் அரசனென்று சொல்லிக்கொள்ளும் டாய்னோ பெல்லெப் என்பான் இருந்தான். சமீபத்தில் அவன் பல்கேரியா நாடு முழுவதும் அச்சுறுத்திக்கொண்டிருந்தான். அவன் பிடிபட்டுத் தூக்குத்தண்டனை விதிக்கப் பட்டான். அவன் கொள்ளைத் தொழிலிற் பிரவேசிக்கும் முன்பு பால்கன் யுத்தங்கள் பலவற்றில் வீரனெனப் பெயர் பெற்று அரசாங்கத்தாரால் சன்மானிக்கப் பட்டிருந்தான். இவனிடத்திலுள்ள விசேஷம் யாதெனில், இவன் நாகரிகக் கொள்ளைக்காரர்களை வெளிப்படுத்தியதேயாம். அவன் விசாரிக்கப்பட்ட நீதி மன்றத்தில் கொடுத்த வாக்குமூலத்தில் அவன் கூறிய மொழிகள் வருமாறு:—

"நமது மந்திரிகளை விட நான் பெருத்த கொள்ளைக்காரனல்ல; எந்தப் பணக்காரரைக் காட்டிலும் நான் பெருங் கொள்ளைக்காரனல்ல; ஏனெனில் மனிதன் பிறரைக் கொள்ளையடிக்காது பணக்காரனாவதில்லை. அதுவும் எளியவர்களையே கொள்ளை யடிக்கின்றனர். நான் வெகு ஜனங்கட்கு உபகாரியென்றே கருதுகிறேன். உங்களுடைய சீர் கெட்ட ஜன சமூகம் என்ன சொன்னாலும் சரி. சென்ற வருடம் ஷிப்கா கணவாயில் போரிஸ் அரசரின் மோட்டார்காரை எனது ஆட்கள் நிறுத்தியபோது நான் விரும்பினால் அவர் உயிரை வாங்கி யிருப்பேனென்று அவரே சாட்சியம் கூறுவார். நாங்கள் அரசரென்றும் அவர் எல்லா மனிதரிலும்மிகுந்தகண்ணிய முடையவரென்றும் எவருக்கும் எவ்விதப் பிழையும் செய்தவ ரல்லரென்றும் அறிந்துதான் 'அரசர் போரீஸ் நீடு வாழ்க' என்று ஆரவாரம் செய்தோம். நியாய மார்க்கத்தினின்றும் தவறுதவரையும் நல்லோரையும் தொந்தரவு செய்யப் படாதென்பதே எனது சித்தாந்தமாகும். நான் நன்கு உணர்ந்தே கொள்ளைத் தொழிலை மேற் கொண்டேன்; பொன்னாசையினாலன்று. நான் எங்கு சென்றாலும் ஏதாவது ஒரு வேலை பார்த்துச் சம்பாதிக்க முடியும். இறைவன் எனக்கு நல்ல மூளையையும்பலத்தகைகளையும் அருளியிருக்கிறார். நான் தயவுக்காக இரந்து நிற்கவில்லை; எளியோருக்கும் தாழ்ந்தோருக்கும் கிட்டாத நீதிக்காக மன்றாடி நிற்கிறேன். மனிதன் ஒரு லட்சியத்தைக் குறிக் கொண்டு வேலை செய்ய வேண்டும். நானும் அவ்விதமே செய்தேன்."



# வைசியநாட்டுச் செய்தி

## தேவகோட்டை.

சென்ற மாதத்தில் இவ்வூர் சைவ சித்தாந்த வித்தியா சாலையின் ஆறுவதாண்டு விழா நடைபெற்றது. யாழ்ப்பாணத்து வித்வான் ஸ்ரீமத் சி. நாகலிங்கம் பிள்ளை யவர்கள் அக்கிராசனத்தில் வித்தியார்த்திகள் உபந்நியாசங்கள் புரிந்தனர்.

ஆடுதுறைக்குச்சமீபத்திலுள்ள திருவைகல்மாடக்கோயில்என்றஸ்தலத்தில் அடுத்த வருடம் முதல் உற்சவம் நடைபெறுவதற்குத்தேவகோட்டை ஜமீன்தா ரவர்களால் ஏற்பாடுகள் செய்யப் படுகின்றன.

திருவாடானை தாலுகா காங்கிரஸ் மகாசபைக் கூட்டம் நடைபெற்ற போது வரவேற்புக் கமிட்டித் தலைவராயிருந்தோர் ஸ்ரீமத் நாகசுந்தரமையர் என்று முன் இப்பத்திரிகையில் வெளிவந்திருப்பதை நாகசாமி ஐயரென்று திருத்திக் கொள்க. பழையன்

---

## மாநகரி.

**தபாலாபீஸ்:**—இவ்வூர் பிரமுகர்கள் முயற்சியின் பேரில் நாளிது நவம்பர் மாதம் முதல் தேதியிலிருந்து இவ்வூரில் ஒரு தபாலாபீஸ் புதிதாக ஏற்பட்டிருக்கிறது. தளக்காவூர் முதலிய பத்து கிராமங்கள் இந்தத் தபாலாபீஸுக்குள் அடங்கியுள்ளன.

**வித்தியா சாலை:**—இவ்வூரில் மிகுந்த பக்திமானும் உதாரகுணசீலருமாகிய ஸ்ரீமாந் லெ. அரு. அருணசலம் செட்டியாரவர்கள் ஒரு வித்தியாசாலை ஏற்படுத்த உத்தேசித்திருக்கின்றனர்,

**கிலமான ஆலயம்:**—இவ்வூருக்குப் பக்கத்தில் சிவகங்கை ஜமீனைச் சேர்ந்த ஒரு பழய ஆலயம் கிலமடைந்து பாம்பு தேள் முதலிய ஜெந்துக்கள் வாசம்செய்வதாகவிருக்கின்றது. இக்கோயிலுக்குப் பூஜை வைப்பவர் ஒரு ஸ்மார்த்த பிராமணர். அடிக்கல் வரியில் ஏதோ எழுத்துக்கள் காணப்படுகின்றன. அவற்றை வாசிக்கக் கூடுமானால் இக்கோயிலின் பூர்வ விருத்தாந்தம் வெளியாகும்.

சி. நாகலிங்கம் பிள்ளை.

---

## சிவநேசர் திருக்கூட்டம்.

இத்திருக் கூட்டத்தார் இரக்தாக்ஷி ஆண்டு ஐப்பசித் திங்கள் ௨௨, ௨௩-ம் நாட்களில் ஒக்கூரில் கூடி ஆலய வழிபாடு செய்து கொண்டு சிவநேசச் செல்வர்களான காரைக்குடி மெ. ஞானசம்பந்தச்செட்டியார், ராம உ ராமசாமிச் செட்டியார், அரிமழம் அ அரு அண்ணமலை செட்டியார், கண்டனூர் தெ அரு சித கரு இராமநாதச் செட்டியார், காரைக்குடி சேவு மெ மெய்யப்பசெட்டியார் ஆகியவர்கள் சைவப் பிரசங்கமியற்றினார்கள். கார்த்திகை மீ ௨௨, ௨௩ தேதிகளில் இத்திருக்கூட்டத்தார் கடியாபட்டியில் கூடி அரிய சிவத்தொண்டு புரிவார்கள்.

திருக்கூட்ட ஊழியன் இராமசாமி.

---

## வெள்ளைக் காக்கை. கலியின் கோலம்.

மாயவரத்தைச் சேர்ந்த புது அக்கிரகாரத்தில் ஒரு தென்னை மரத்தில் காக்கைக் குஞ்சு இரண்டிருந்தன. அவற்றில் ஒன்றுவெள்ளையாகவிருக்க அதனை ஒருவன் எடுத்துவந்தான். ஸ்ரீமாந் கண்டனூர் நா அ ராம காசிவிஸ்வநாதன்செட்டியா ரவர்கள் தக்க கிரயம் கொடுத்து வாங்கித்தற்காலம் மாயவரம் பட்டமங்கலத் தெரு அ நா அன்னசத்திரத்தில் வைத்திருக்கிறார்கள்.

கண்டு களித்தோன்.

---

## இரங்கூன் தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கம்.

கந்தர் ஷஷ்டியை முன்னிட்டு நமது சங்கச் சார்பில் பல மெய்யன்பர்களால் செய்யப் பெற்று வந்த கந்தபுராணக் பிரசங்கம் ௩௭-ம் தேதியோடு முடிவுற்றது. அதன் காரணமாக இராமசந்திர ஐயரவர்களைக்கொண்டு 'வள்ளி திருமணம்' பல இன்னிசைக் கருவிகளுடன் ௮ மணி முதல் ௧௨ மணிவரைக் காலட்சேபம் செய்யப் பெற்றது.

சா. அ. கணேசன்.

---

புதுக்கோட்டை சட்ட சபையில் ஆரம்பக் கல்வியை கிராமங்கள் தோறும் பரப்பவேண்டிய அவசியத்தைப் பற்றி ஒரு தீர்மானமும் நிறைவேறி யிருக்கிறது. புதுக்கோட்டை சமஸ்தானமானது தமிழ் நாட்டில் ஒருவழி காட்டியாக விருக்கும்போலும்.

---

# கப்பற் செய்தி.

'எரின்புரா' கப்பல் இரங்கூனிலிருந்து ஐப்பசி மீ ௨௯-ம் தேதி சென்னைக்கு வந்து சேர்ந்தது. ௨௭-ம் தேதி வெள்ளிக்கிழமை இரங்கூனுக்குப் புறப்படும்.

'டீஸ்டா' கப்பல் மலாய் நாட்டிலிருந்து கார்த்திகைமீ ௩-ம்தேதி செவ்வாய்க்கிழமை சென்னைக்கு வந்து சேரும்.

# பொதுச்செய்தி

பர்மாவில் தயிட்மோ ஜில்லாவில் கட சங்கங்களும் டவாயில் ஒன்றும் சட்ட விரோத மானவையென அறிவிக்கப் பட்டிருக்கிறது.

*　　*

தொழிற்கட்சிப் பிரதம மந்திரியாக விருந்த கனம் ராம்ஸே மக்டனல்டு இனிப் புத்தகம் எழுதுவதில் காலம் போக்க உத்தேசித்திருக்கின்றனராம்.

*　　*

வங்காளத்தின் அடக்கு முறைகளைப் பற்றி ஆலோசிப்பதற்காக நாளிது நவம்பர்மாதம்௨௩-ம்தேதி பம்பாயில் அகில இந்திய காங்கிரஸ் நிர்வாக சபைக் கூட்டம் ஒன்று கூடும்.

*　　*

வைக்கம் ஜாதிஇந்துக்களாலாகியஜாதா கால்நடையாகச் சென்று நேற்றுச் செவ்வாயன்று திருவநந்தபுரத்தைச்சேர்ந்திருக்க வேண்டும். வழியில் ஒவ்வொரு ஊரிலும் ஜாதாவுக்குப் பெருத்த உபசாரங்கள் நடைபெற்றன.

*　　*

பர்மாவில் 'உந்தானு' பத்திரிகையின் ஆசிரியரின் மீது இராஜத்துரோகக் குற்றம் சாட்டி அரசாங்கத்தார் கொண்டு வந்த வழக்கில் அவருக்கு ௫௦௦ ரூபா அபராதம் அல்லது ஒன்பது மாதம் வெறுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

*　　*

மண்ணீரல்தான் மனிதனுக்குக்கோபம், பொறாமை, துக்கம்முதலிய துர்க்குணங்களுக்குக் காரணமாதலால் அதனை யெடுத்து விட்டால் மனிதன் சாந்த குண முடையவனாவா னென்று ஒரு பிரபல மேனாட்டு வைத்திய நிபுணர் கூறுகிறார்.

*　　*

இங்கிலாந்தில் பால்டுவின் மந்திரி சபை நிருமாணமாகி விட்டது. இந்தியா மந்திரி ஸ்தானத்தில் வின்ஸ்டன் சர்ச்சில் வருவாரென்று எதிர்பார்த்தது போய் இப்போது கனம் பர்க்கன்ஹெட் பிரபு வந்திருக்கிறார். இவர் லாயிட் ஜியார்ஜ் கலப்பு மந்திராலோசனை சபையில் ஒரு ஸ்தானம் வகித்தவர். கன்ஸர்வேடிவ் கட்சியைச் சார்ந்தவரல்லாத போதிலும் இந்தியாவுக்கு இவரது ஆளுகையில் பெருத்த நன்மை கிடைத்துவிடுமென்று எதிர் பார்க்கவியலாது. இவர் சமீபத்தில் இந்தியாவில் சுற்றுப் பிரயாணம் செய்து நிலைமையை நேரில் அறிந்து கொள்ள உத்தேசித்திருப்பதாகத் தெரிகிறது.

சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு
வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித்
தோனை விளங்குவள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனை
கார்மயில் வாகனனைச்
சாந்தனைப் போது மறவா
தவர்க்கொரு தாழ்வில்லையே.

—அருணகிரி நாதர்.

---

குமரன், காரைக்குடி.
ரக்தாக்ஷி ஹ ஐப்பசிமீ உஎவ.

---

## சேரமாதேவி குருகுலம்.

இக் குருகுலத்தைப்பற்றி ஸ்ரீமாந் வரதராஜுலு நாயுடு அவர்கள் தமிழ் நாட்டுப் பத்திரிகையில் எழுதியிருப்பவைகளையும் முதலியார வர்கள் நவசக்தியில் எழுதியிருப்பவைகளையும் நமது நேயர்கள் அறிந்திருப்பார்களென்று நம்புகிறோம். இவற்றைப் படித்தபோது நேரிற் சென்று பார்த்த பிறகே நமது அபிப்பிராயத்தை வெளியிட வேண்டுமென் றெண்ணினோமாதலால் அப்பொழுது நாம் ஒன்றும் எழுதவில்லை. இப்பொழுது நேரிற் சென்று பார்வையிட்டோம். குருகுலத்தின் தலைவர் ஸ்ரீமாந் ஐயரவர்களுடனும் பேசினோம்.

இக் குருகுலத்தின் தலைவர் ஸ்ரீமாந் வ. வெ. ஸுப்ரமண்ய ஐயரவர்களாவர். இவர்களது சீரிய ஒழுக்கமும் அகன்ற உலக அறிவும் நிறைந்த கல்வியும் போற்றற் குறியனவாகும். மேலைத் தேசக் கல்வியறிவுடையவர்களுள் தென்னாட்டில் இவர்களே நிறைவுடையவர்களென்று நாம் துணிந்து கூறுவோம். இக் காரணங்களால் எமக்கு ஐயரவர்களிடத்தில் பெருமதிப்புண்டாகி யிருக்கிறது. பலமிழந்திருக்கும் தமிழ் மக்களிடையில் மிகுந்த சிரமத்துடன் ஒரு குருகுலத்தை ஸ்தாபித்து நடத்த முன் வந்தமை மகிழ்ச்சி யளிக்கக் கூடிய தன்றோ? ஆதலால் தான் 'தமிழ்நாடு' 'நவசக்தி' களைப்பார்த்தவுடன் எமதபிப்பிராயத்தை வெளியிட விரும்பவில்லை.

குருகுலத்திற் கென முப்பத்தொரு ஏக்கர் நிலம் சேரமாதேவி ரயிலடிக்குச்சுமார் முக்கால் மயில் தூரத்தில் வாங்கப்பட்டிருக்கிறது. அதனுள் சில கூடங்கள் ஓட்டினுலும் பனையோலையினுலும் கட்டப்பட்டிருக்கின்றன. பிள்ளைகட்குத் தமிழிலும் வடமொழியிலும் ஆங்கிலத்திலும் பாடங்கள் நடை பெறுகின்றன. நல்ல தண்ணீர், நல்லகாற்று, குழந்தைகளை ஆங்குள்ள ஆசிரியர்கள் அன்போடு நடத்துகிறார்கள். அதனைப் பார்க்கும்போது பண்டைய வாழ்க்கையின் ஞாபகம் உண்டாகிறது. ஆசிரமத்திலுள்ள வேலைகளைக் குழந்தைகள் தங்கள் தகுதிக்குத் தக்கபடி முறையாகப் பார்த்து வருகின்றனர். தேகாப்பியாசம் முதலியன நன்கு கவனிக்கப்படுகின்றன. இந்த மட்டில் யாவருக்கும் திருப்தியை அளிக்கும் முறையில் தான் ஆசிரமம் நடைபெறுகிறது.

நாயுடு அவர்கள் கூறுகிற விஷயங்களில் முக்கியமானது பிராமணக் குழந்தைகட்கும் ஏனைய குழந்தைகட்கும் வித்தியாசம் பாராட்டப்படுகிற தென்பதாகும். பிராமணரல்லாதவருடைய குழந்தைகட்குக் கல்வியில் பேதங் காட்டப்படுகிறது; சந்தியாவந்தனம் சொல்லிக் கொடுக்கப்படவில்லை; சாப்பாட்டில் பிரித்து வைக்கப்படுகின்றனர்— என்ற விஷயங்களையே முக்கியமாக நாயுடு கூறுகின்றனர். நாமறிந்த வரையில் கல்வியில் பேதங் காட்டப்படவில்லை. சந்தியாவந்தன மந்திரம் சொல்லிக் கொடுக்கப்படவில்லையென்பது உண்மையேயாகும். அதைப்பற்றி ஐயரவர்களைக் கேட்டதற்கு உபநயனம் செய்விக்கப்பட்ட குழந்தைகட்கே அம்மந்திரம் சொல்லிக் கொடுக்கப்படுவது முறையென்றும் உபநயனம் செய்விக்கப் பெறுதிருக்கிற சில பிராமணக்குழந்தைகட்கும் அம்மந்திரம் சொல்லிக் கொடுக்கப் பெறவில்லை யென்றுங் கூறினர்கள். உண்வு கொள்ளும் போது பிரித்து வைப்பது உண்மையே யாகும். நாம் முன்னர் கேள்வியாலறிந்திருந்தபோது சில பிராமணக் குழந்தைகள் மட்டும் தனியாகச் சாப்பிடுகிறார்களென்றும், ஏனைய சில குழந்தைகள் கலந்திருந்து உட் கொள்கிறார்களென்று மறிந்திருந்தோம். அங்கு சென்ற பிறகு பிராமணக் குழந்தைகள் யாவரும் உள் ஹாலிலும் மற்ற குழந்தைகள் யாவரும் வெளியிலுள்ள வாரமொன்றிலும் இருந்து உண்ணுகிறார்களென்று அறிந்தோம். இதைப் பற்றி ஐயரவர்களிடம் வினவியபோது, முன்னர் யாவரும் வரிசையாகவே யிருந்து உண்டார்களென்றும், பிறகு போசனசாலையாக உபயோகிக்கப்பட்ட கட்டிடத்தில் அச்சுக்கூடம் வைக்கப்பட்டபடியால் இக் கட்டிடத்திற்கு மாற்ற வேண்டி யாய்விட்டதென்றும் இங்கு ஒரே வரிசையாக இருந் துண்பதற்கு இடம் போதவில்லை யென்றும் கூறினர்கள். இப்படி யவர்கள் கூறுவதால் கலந்துண்ணும் இயக்கத்தில் அவர்கள் விருப்பங் காட்டுகிறார்களென்று மட்டுந் தெரிகிற தன்றி குருகுலத்தை அந்த வழியில் நடத்த அவர்கள் இன்றைக்கு விரும்பவில்லை யென்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். பின்னரும் அதைப்பற்றிக் கேட்டதற்கெல்லாம் பதில் கொடுத்தார்கள். இது விஷயமாக அவர்கள் கூறியன வருமாறு:—வருணாசிரமம் நிலை கலங்கி யிருக்கிறது உண்மை. புதிய திருத்தத்தோடு புதிய நிர்மாணம் செய்யப் பெற வேண்டும். பிராமண—க்ஷத்திரிய—வைசிய ஜாதிகள் வகுக்கப்பட்டு அததற்கு உரியவர்களைத் தேர்ந்து அந்தந்த ஜாதியில் சேர்க்கப்படும்போது அவர்கட்கு சம்ஸ்காரம்செய்யப் பெறவேண்டும். அதையும் இப்பொழுது செய்யத் தமக்குப் போதிய ஆற்றலில்லை. இந்தக் குருகுலமானது கல்வி யபிவிருத்திக்கெனவே ஏற்பட்டதன்றி ஆசாரத் திருத்தத்தை முக்கிய நோக்கமாகக் கொண்டு ஆரம்பிக்கப்பட வில்லை. ஜன சமூகத்தினுள் எப்படி ஆசாரங்கள் இருக்கின்றனவோ, அப்படியே (அதாவது பிராமணர் வேறு, பிராமணரல்லாதார் வேறு என்பது) இங்கிருக்கிற தன்றிப் புதிய மாதிரியாக இங்கு பிரிக்கப்படவில்லை. தாய் தந்தையர் விரும்பாதபோது நாம் கலக்கும்படி வற்புறுத்தினுல் பிள்ளைகள் ஆசிரமத்தில் தங்கமாட்டா. அப்படியும் நேர்ந்திருக்கிறது.



கடைசியாக ஸ்ரீ ஐயரவர்களுடைய அபிப்பிராயத்தைத் திரட்டிச் சொல்வதானால், "தற்போதிருக்கிற ஜாதி பேதத்திற்கு அர்த்தமேயில்லை யென்பதை யொப்புக்கொள்கிறார்கள். அதைச் சீர்ப்படுத்துவதிலும் கலந் துண்பதிலும் அவர்கட்கு ஆக்ஷேபமில்லை. ஆனால் பழய வழக்கத்தை மீறி ஆசிரமத்தை நடத்த அவர்கள் தயாராகவிருக்கவில்லை. (வைதீகருள்பட) எல்லாக் கட்சியாரும் சேர்ந்து செய்யும் முடிவின்படி ஆசிரமத்தை நடத்தத் தயாரா யிருக்கிறார்கள். அப்படி யொரு முடிவைப் பொது ஜனங்கள் செய்கிற வரையில் ஆசிரமம் இப்பொழுதிருக்கிறபடி தான் நடக்கும்."

கலந்துண்பதில் ஐயரவர்கட்கு ஆக்ஷேபமில்லை. ஆனால் குழந்தைகளை அவ்வழி செலுத்த அவர்கள் இணங்கவில்லை. அப்படிச் செய்வதற்குத் தமக்கு ஆற்றலில்லை யென்று அவர்கள் கூறுவது போதிய சமாதானமாக இருக்க வில்லை. ஜன சமூகத் தலைவர்கள் கூட்டங்கூடி முடிவு செய்கிறபடி திருத்தஞ் செய்வதானால் இந்தக் குருகுலம் அவசியமென்று சமூகத் தலைவர்கள் கூடித் தெரிவித்த பின்னரே ஆரம்பித்திருக்க வேண்டுமல்லவா? சமூகத்திலுள்ள குழந்தைகட்குக் கல்வி முதலியவற்றைக் கற்றுக் கொடுத்துத் திருத்துதற்கென்று ஆசிரமத்தை வகுத்த பின்னர் எந்தெந்த வழிகளில் திருத்த வேண்டுமோ அவைகளைச் செய்யப் பின் வாங்குவது முறையாகமாட்டாது. ஜனசாரத்திருத்தம் அவசியமென்றால் அதனைக் கைப்பற்றும்படி அங்கு படிக்க வருகிற குழந்தைகட்கு போதிக்க வேண்டியது அவர்களது கடமையே யாகும். உதாரணமாக உணவு விஷயத்தில் மிளகாய் புளி முதலியவற்றை நீக்கி ஏறக்குறைய சுவையற்றதாக்கியிருக்கின்றனர். கொழுமையான உணவு அங்கில்லை யென்பதற்காகவே பல குழந்தைகள் ஆங்கனுப்பப்பெறுதிருப்பதை நாம் அறிவோம். வெளியிலிருக்கிற ஆசாரப்படி ஜாதிப்பிரிவில் சாப்பாட்டிடம் வைக்க வேண்டியதவசியமானல் குழந்தைகள் வீட்டில் எப்படி யுணவு கொண்டார்களோ, அப்படிப்பட்ட உணவே ஆசிரமத்திலுங் கொடுக்கப்படவேண்டுமென்றாகு மல்லவா? இந்தஉணவுமாற்றத்திற்காகக் குழந்தைகள்வராமற்போனல் போகட்டுமென்று ஆசிரமவிதிகட்டாயப்படுத்துவதுபோல சம உணவுக்கு உடன்படாதவர் விலகி நிற்கட்டுமென்று விதி செய்வதில் ஆக்ஷேபமில்லையன்றோ? ஆசிரமத்தை நடத்துதற்கு ஐயரவர்களே உரிமையுடையவர்களாவர். ஜாதிவித்தியாசப்படி உணவளிப்பதானல் நாளாக ஆக ஆசிரமநிலை கஷ்டமாகிவிடுமென் றஞ்சுகிறோம். வெளியில் ஜன சமூக மிருக்கிறபடி ஆசிரமத்தில் அநுஷ்டிப்பதென்பது ஆபத்துக்கே இடமாகும். இப்போது வெளியுலகில் வடகலையார் தென்கலையார் செல்லூரார் ஸ்மார்த்தர்கள் யாவரும் ஒருவரோடொருவர் சமபந்தி போஜனம் செய்வதில்லை. முதலியாரும் செட்டியாரும்பிள்ளைமாரும்விசுவப்பிராமணரும்பிறருமாகியஒவ்வொரு குழுவினரும் பிறிதொரு கூட்டத்தாருடனிருந் துண்ணமாட்டார். இத்தனைக்கும்தனித்தனியாகஉணவு அளிப்பதே நலமாகுமென்று பெற்றோர் கூறுவரன்றோ? இத்தனைக்கும் ஆசிரமம் இணங்குமானல் தனித்தனியாக ஒவ்வொரு பிள்ளையை வைத்து உணவளிப்பது பெருந் துன்பமாகாதா? ஜாதிவித்தியாசத்தை உணவு முறையில் பாராட்டுவதானல் கடைசியாகச் சில குழந்தைகள்தாம் கல்வி பெற முடியும். ஐயரவர்கள் கூறிய சமாதானங்களையும் காதாரக் கேட்டோம். ஏனைய வர்ணாச்சிரமிகள் கூற்றையும் பொறுமையோடு கேட்டிருக்கிறோம். தற்காலத் தமிழ் நாட்டின் நிலைமையையும் மறக்க முடியவில்லை. சாவதானமாகச் சில நாள் யோசித்தும் பார்த்தோம். எப்படியும் குருகுலத்தில் சாப்பாடு ஒருபந்தியாக வைத்துப் பரிமாறப்படுவதே நியாயமாகு மென்று தோற்றுகிறது. எம்முடையமனச்சாக்ஷிவழி எமது ஜனங்கட்குத் தெரிவிப்பது எமது கடமை யன்றோ? தமிழ் நாட்டின் தேவையையுணர்ந்து மிகுந்த கஷ்டத்துடன் குருகுலங்கண்ட ஐயரவர்களின் பெருந்தகைமையைப் போற்றுவோம். அதற்குத் தக்க நன்றியும் செலுத்துவோம். இதுபோது வைதிகர்களொருபுறமும் பிராமணரல்லாதா ரொருபுறமும் நின்று வலிப்பதாலுண்டாகும் சிரமநிலைமையையும், பொதுஜன உதவிபெற்றுக் கஷ்டக்கடலுள் நின்று குருகுலத்தை நடத்தவேண்டியிருப்பதையும் நாம்மறந்துவிடவில்லை. ஆனல் பிரித்து உணவளிப்பதை யேற்றுக்கொள்ள முடியவில்லை.

குருகுலமென்பது சரஸ்வதிதேவியின் கோயிலென்று நாம் கருதுகிறோம். பாரதிதேவியின் பீடத்தில் குழந்தைகளின் அறிவை விளக்கி ஆசாரத்தைத் திருத்தும் தெய்வமாக ஸ்ரீமாந் ஐயரவர்கள் விளங்குகிறார்கள். அந்தத் திருச்சன்னிதானத்தில் பேதமேது? அந்தப் பிரசாதத்தை உண்பதற்கு மறைவிடமும் வேண்டுமோ! பிடிவாதமுடைய வீர வைணவராயிருப்பவர்கூட ஜாதிபேதம் சமயபேதமுள்ள பலர் கூடியிருக்கிற கூட்டத்திலும், கண்ணபிரான் ஆலயத்தில் மறைவின்றி பிரசாதமுண்டுமகிழ்கிறார். குருகுலமாகிய ஞானாலயத்தில் மறைவிடமெதற்குக்கு?

இப்பொழுது ஐயரவர்கள் நன்கு சிந்தித்துத் தெளிந்து ஒருவழியிலிறங்கி விடவேண்டும். தனித்தனியான சாப்பாட்டிடம் அவசியமானால், அப்படித்தான் செய்யப்படுமென்று விளக்கமாகத் தெரிவித்து விடுதலவசியமாகும். அல்லது ஒன்றுக்கிவிட வேண்டும். அவ்வாறு தங்கள் நோக்கத்தை விளக்கிக் கூறிவிட்டால் அதனை விரும்புவோர் உதவிபுரிவர். வியவகாரமுண்டாக மாட்டாது. விளக்கமாகக் கூறப்படாதபடியால்தான் இருவகை நோக்கமுடையாரும் கலக்கமுற இடமுண்டாகி யிருக்கிறது. இவ்விதமான நிலைமையைச் சீர்ப்படுத்த அவசியம் இப்போது நேர்ந்து விட்டதென்று நாம் கூறவேண்டியதில்லை.

---

## எண்டிசைக் காட்சி.

---

### காளையார் கோவில் — — — — தேவஸ்தானம்.



காளையார் கோவில் தேவஸ்தானத்தின் கணக்கு விபரம் மற்றொரு பக்கத்தில் வெளியாகி யிருக்கிறது. இந்த தேவஸ்தானம் சிவகங்கை ஜமீனைச் சேர்ந்ததாகும். இப்பகுதியில் இந்த ஜமீனுக்குச் சொந்தமான கோயில்கள் பல இருக்கின்றன. ஆனால் ஏனைய கோயில்களின் பொருட்டு நிலங்களிருந்து நிறைய வரும்படி வந்தும் அக்கோயில்கள் சீர்கெட்ட நிலைமையில் கிடக்கின்றன. கவனிப்பாரற்று மாடாடு நுழைந்து அசுத்தப் படுத்திக் கிலப்பட்டுப் புற்றாா வாழ்ந்து கொண்டுள்ள கோயில்கள் பல. அவற்றைப் புதுக்கி ஆலயமெழுப்ப முன் வருவோரிடம் ஒப்புவிக்க ஜமீன் தரப்பில் இடங் கொடுப்பது கிடையாது. இந்நிலையில் காளையார் கோவில் தேவஸ்தானத்திற்குக் கடன் வாங்கி நடத்தி வருவது பலருக்கு வியப்பாக விருக்கு மன்றோ? சென்ற வருடத்தில் இத் தேவஸ்தானத்திற் கிருந்த கடன் ரூபாய் ௭௨௨௯௯-௧௦-௩ இவ்வருடத்தில் ரூ ௧௧௧௭௪௯-௩-௯. ஆது

ம் இவ்வருஷத்தில் கோர்ட் செலவு மட்டும் ரூபா பதின்மூன்றுபிரந்துக்கு மேலாகிறதாம்.

## திருப்பத்தூர் தாலுகாக் கூட்டம்.

பெல்காம் காங்கிரஸுக்குப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதற்கு இந்தத் தாலுகாவில் தேர்தல் நடை பெற வில்லை. ஆனால் திருப்பத்தூரிலிருந்து தெரிவிப்பதாகச்சுதேசமித்திரனில் சிலருடைய பெயர்கள் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதாகக் குறிக்கப்படுகின்றன. இவ் விஷயங்களில் தலைப்பட்டு நிற்போர் தங்கள் வீட்டிலேயே மனம் போனபடி தங்கட்கு வேண்டியவர் பெயரை மட்டும் பத்திரிகைகட்குத் தெரிவித்து விடுவது முறையன்று. இதற்குக் காரணம் பலரும் காங்கிரஸில் ஊக்கங் காட்டி முன்னிற்க விரும்பாததேயாகு மன்றோ?

## சுகோதயம் லிமிடெட்.

ஆரணியிலிருந்து வெளியாகும் "சுகோதயம்" எனும் வாரப் பத்திரிகையை ஒரு லிமிடெட்கம்பனியின்மூலம்நடத்துவதென்று அதன் நிர்வாகிகள் முயன்று வருகின்றனர். மகாத்மாவின் கொள்கையில் ஈடுபட்டுழைத்து வருகிற சில தமிழ்ப் பத்திரிகைகளுள் சுகோதயமும் ஒன்றாகும். அக்கம்பனிக்குப் பங்கு சேர்ப்பதற்காக மேற்படி பத்திரிகையின் உதவியாசிரியர் ஸ்ரீமாந் ரங்கனதய்யரவர்கள் இப்பகுதிக்கு வந்திருக்கிறார்கள். நேயர்கள் அவர்கட்கு இயன்றஉதவி புரிவார்களாக.

## நூல் சந்தா

மாதந்தோறும் உ௦௦௦ கஜம் நூல்காணிக்கையாக மகாத்மாவுக்குப் பலர் அனுப்பி வருகின்றன ரென்பதை நேயர்கள் அறிவார்கள். காங்கிரஸ் அங்கத்தினர் ஒவ்வொருவரும் இப்போது செலுத்தி வரும் சந்தாவுக்குப் பதிலாக மாதந்தோறும் உ௦௦௦ கஜம் நூல் நூற்று அனுப்ப வேண்டுமென்பது மகாத்மா அவர்களின் கருத்தாகும். இதனை வேறு சில தலைவர்கள் "முடியாது" என்று எதிர்த்தனர். இப்போது மகாத்மா, தேசபந்து தாஸ், பண்டித நேரு ஆகிய மூவரும் கையொப்பமிட்டு வெளியிட்டிருக்கிற அறிக்கையில்பின் வருமாறு குறிப்பிடப் பட்டிருக்கிறது:—

காங்கிரஸ்வைபவங்களிலோ அல்லது காங்கிரஸ் வேலை செய்யும்போதோ அல்லது ராஜீயக் கூட்டங்களிலோ கையால் நூற்றுக் கையால் நெசவு செய்த கதர் துணியை அணியாதவர்களும், அவரவர் சொந்தமாக நூற்றோ அல்லது நூற்க இஷ்டமில்லாமல் அல்லது தேகஅசௌக்கியத்தால் அல்லது இதர காரணங்களால் நூற்க முடியாமல் பிறர் நூற்றதைக் கொண்டோ, ஒரே ரகமான உ௦௦௦ கஜம்நூல் மாதா மாதம் அனுப்பாதவர்களும், எந்த காங்கிரஸ் சபை அல்லது காங்கிரஸ் கமிட்டியிலும் அங்கத்தினரா யிருக்கக் கூடாது.

இத்தீர்மானத்தின் கருத்து காங்கிரஸில் அங்கத்தினரா யிருப்போர் யாவரும் உ௦௦௦ கஜம் நூல் மாதந்தோறும் நூற்றனுப்ப வேண்டு மென்பதேயாகும். ஆனால் நூல் நூற்க முடியாத சில சோம்பேறிகட்கும் வாய்ப் பேச்சுக்காரருக்கும் காங்கிரஸில் அங்கம்பெற உரிமை கிடைத்திருக்கிறது. அதனால் நமக்கென்ன குறை? மாதந்தோறும் நூல் நூற்றனுப்ப வேண்டியது நமது கடமையாகும்.

## விட்டுக் கொடுத்தல்.

மகாத்மாவின் விருப்பப்படி நூல் நூற்றனுப்ப லக்ஷக்கணக்கான ஜனங்கள் தயாராக விருக்கிறார்க ளென்று நாம் கூற வேண்டிய தில்லை. அந்த பலத்தைக்கொண்டும் நியாயமாக தேசத்தின்பொருட்டுத் தினந்தோறும் அரை மணி நேரம் ஊழியம் புரிவது கடமையாகு மென்றும் கருதி மகாத்மா அவர்கள் தன் கையால் நூற்றனுப்புகிற தீர்மானத்தைவற்புறுத்தலாம். வந்தவரை வைத்துக் கொண்டு ஏனையோரை யொதுக்கி விட்டு இயக்கத்தை நன்றாக நடத்தலா மன்றோ? கையால் நூற்றனுப்புவதே முறையாக விருக்க நேர்மைக்கு மாறாக விலைக்கு வாங்கி யனுப்பலா மென்று தீர்மானிப்பது ஒரு தீர்மானமாகுமா? இதைவிடப் போலியான தீர்மானம் வேறொன்றுண்டோ? சத்திய சொருபமாக வுள்ள மகாத்மா அவர்கள் இந்தத் தீர்மானத்திற்கு இணங்கி யிருப்பது பொய்மையின்பாற் படுமென்றே சத்திய சீலர்கள் எண்ணுவார்கள். காட்டிற்குச் சென்று தவம் புரியும் நோக்கமாவது எது எப்படியாயினும் ஆகட்டும் என்ற பொறுப்பற்ற நிலையில் நிற்கும் நோக்கமாவது மகாத்மா அவர்கட் கில்லை யாதலால் இத்தீர்மானத்திற்கு இணங்கி இருக்கிறார்கள். இத்தீர்மானம் முறையற்றதென்று கருதிக் கொண்டே இதற்கிணங்கி யிருக்கிறார்கள். இதுதான் உலகத்துடன் கலந்து திருத்தும் முறையாகும். இதுவே பிறருக்கு விட்டுக் கொடுத்தலாம்.

## உள்ளூர்

**வருமான வரி உத்தியோகஸ்தர்:—** இவ்வுத்தியோகஸ்தர் கார்த்திகை உ௰ம் தேதி முதல் எ௰ம்தேதிவரையில் கீழச்சிவப்பட்டியில் முகாம் செய்வார்,

**பிறந்த தினக் கொண்டாட்டம்:—** இவ்வூர் யூனியன் சேர்மனும் தாலுகா போர்டு, ஜில்லா போர்டு மெம்பருமாகிய ராவ் பகதூர் ஆவ். பழ. சிதம்பரம் செட்டியாரவர்களின் பிறந்த தினக் கொண்டாட்டம் நேற்று செவ்வாய்க்கிழமை மாலை ௬ மணிக்கு ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வர ஹைஸ்கூலில் தேவகோட்டை டிப்டி கலெக்டர் ஸ்ரீமாந் என். கோயில் பிள்ளையவர்களின் தலைமையில் இனிது நடை பெற்றது.

## தந்திச்செய்தி

பினாங்கு, ஐப்பசி உருவ

| | |
|---|---|
| சென்னை உண்டியல் விலை | கரு௭ |
| ஈயம் விலை | கஞ௦ |
| ரப்பர் விலை | அரு |

(த. வை. ஊ.)

## மூவார்.

**தீபாவளி:—** இவ்வூரில் இவ்வருஷம் தீபாவளி யன்று வயது சென்ற முதியோர்களும் இளைஞர்களும் கதரணிந்திருந்தனர். முதலாளிகளும் கூட்டாளிகளும் கதராடையே உடுத்தினர். கோவிலில் ஐயர் பண்டாரம் மேளகாரன் ஏனைய ஆட்கள் யாவரும் கதராடையையே புனைந்திருந்தனர். சமையற்காரர்களும் கணக்குப் பிள்ளைகளும் தூய கதராடைதான் அணிந்திருந்தனர். சிறு பையன்கள் யாவரும் சீமைத் துணிகளின் பகட்டில் வசப்படாமல் பரிசுத்தமான புண்ணியக் கதராடையை உற்சாகமாகக்கட்டி மகிழ்ந்தனர். வயது முதிர்ந்த பெரியோரும் கதரில் பிரியமுடையவர்களாக விருப்பதைப் பெரிதும் பாராட்டுகிறேன். ஆனால் இத்தனை பேர் கதராடை உடுத்திருந்த இந்த ஊரில் ஐந்து அன்பர்கள் கதராடை யுடுக்கவில்லை யென்று வருத்தத்தோடு தெரிவிக்க வேண்டியவனாக இருக்கிறேன். இவர்களுடைய மனதிலும் கதராடை யுடுத்துத்தேசத்திற்குப் பேருதவி செய்ய வேண்டு மென்ற எண்ணத்தை முருகப்பிரான் விரைவில் உண்டாக்குவாரென்று நம்புகிறேன்.

**தனவைசியநாட்டுக் கதர்க் கழகம்;** இக்கழகத்திற்காக இதுவரை இவ்வூரில் ஆயிரத்து முன்னூற்று எண்பது வெள்ளி வசூலாகி யிருக்கிறது. இன்னும் சிறிது தொகை வசூலாகு மென்றெதிர் பார்க்கப்படுகிறது. ஷை கழகத்திற்கு சைகோனில் சுமார் இரண்டாயிரம் வெள்ளிவரை ஸ்ரீமாந் பழ. நா. பழனியப்ப செட்டியாரவர்கள் வசூல் செய்திருக்கிறார்க ளென்று தெரிகிறது.

**தென்னிந்தியா வெள்ளக் கஷ்ட நிதி:—** இந்த நிதிக்கு இவ்வூரில் றிங்கி அருஉ சேர்த்து நமது தலைவர் ஸ்ரீமாந் ச. இராஜகோபாலாச்சாரியா ரவர்கட்கு அனுப்பப்பட்டிருக்கிறது,

**குருகுல வித்தியாலயம்:—** இதற்குப் பண வுதவி பெறும்பொருட்டு இங்கும் வந்தார்கள். அவர்கட்குச் சுமார் ஆயிரத்திருநூறு வெள்ளியும் வத்தப்பகாரில் சுமார் முன்னூறு வெள்ளியும் கொடுத்துதவி யிருக்கின்றனர்,

ஒரு நிருபர்,



## மனோரஞ்சிதம்.

குட்டிச்சாத்தன் எழுதியது.

**எது நல்லது?:—** நாயகன் நாயகியை அடக்கியாள நினைக்கிறான். நாயகி நாயகனை அடக்கியாளநினைக்கிறாள். இரண்டுக்கும் இடையில் பெருஞ்சண்டைகள் உண்டாகின்றன. இருவரும் ஒருவரையொருவர் அவமதிக்காது, ஒன்றுபட்ட அன்புநிறைந்த மனத்துடன் வாழ்தல்தான் நல்லது.

**பாவத்தைக் கழுவுதல்:—** எப்பொழுதும் பாவ காரியங்களையே செய்துகொண் டிருப்போர், சோப் போட்டு அழுக்கைக் கழுவி விடுவது போல், தீர்த்த யாத்திரை செய்து பாவத்தைக் கழுவி விட நினைக்கிறார்கள். இது முடியாத காரியம். கடவுள் ஏமாந்தவரல்லர். தீர்த்தமாடினால் அறியாமற் செய்த பாவத்தைப் போக்குவாரேயொழிய அறிந்து பன்முறை செய்யும் பாவத்தை ஒரு நாளும் தீர்க்க மாட்டார். மூட்டை கட்டிச் சுமந்து அநுபவித்தால்தான் தீரும்.

**வண்ணாரும் வேஷ்டியும்:—** வண்ணாரிடத்தில் சேலை வேஷ்டி முதலியன வெளுக்கப் போட்டால், அவர்கள் அவ்வகளை ஒருவாரம் வரை கட்டிப் புரட்டிப் பின்னர் வெளுத்து நமக்குத் தருகிறார்கள், வெளுக்க வருகிற வேஷ்டிகளையும் சேலைகளையும் கட்டியே அவர்களுடைய காலம் கழிகிறது. தங்களுக்கெனச் சொந்தமாக அவர்கள் விலைக்கு வேஷ்டி வாங்குகிறார்களில்லை. இது நம்முடைய நாட்டில் ஓர் ஆபாசமான முறையாக விருக்கிறது. வேஷ்டி வெளுக்கக் கொடுப்போர் வண்ணார்களைக் கண்டித்துத் திருத்துதல் வேண்டும்.

**தண்ணீர்ப்பந்தரினுமா வித்தியாசம்?:—** நமது நாட்டிலுள்ள தண்ணீர்ப் பந்தர்களில் தாழ்ந்த ஜாதியார் என்று சொல்லப்படுகிறவர்களுக்கு மூங்கில் குழாய்களின் வழியே தண்ணீரை ஊற்றுகிறார்கள். அதனை அவர்கள் இரு கைகளிலும் ஏந்திக் குடிக்கிறார்கள். இவ்வாறு வேறுபடுத்தி அவர்களை அவமானஞ் செய்வதைக் காட்டிலும் தண்ணீர் கொடுக்காமல் நிறுத்தி விடுவது நல்லது. தண்ணீர்ப் பந்தர்களில் இவ்வாறு வித்தியாசங் காட்டுவது மிகக் கூடாத காரியம். குழாய் வழியே தண்ணீர் குடிக்கச் சொல்வது பெருங் கொடுமையாகும். தண்ணீர்ப்பந்தர் வைப்போர் அவர்களுக்கெனத் தனி லோட்டாக்களாவது வைத்துக் குழாய் முறையை நீக்கி விட வேண்டும்.

**கோளம் வானராசாரம்:—** மலையாள தேசத்தில் திருக்கோயில்களில்பிராமணரல்லாதார்க்கு, போற்றிமார் விபூதி சந்தனம் முதலிய பிரசாதங்களைப் படிக்கல்லிலே எறிகிறார்கள். கையிலே கொடுத்தால் தீண்டல் ஒட்டிக்கொண்டு விடுமாம்! பிரசாதத்தைக் கீழே எறிந்து அவமரியாதைசெய்து பாவத்தைத் தான் தேடிக்கொள்ளுகிறார்கள். படிக்கல்லில் இணைக்கப் பட்டிருக்கும் வளைந்த தகட்டில் தீர்த்தத்தை ஊற்றுகிறார்கள். பிராமணரல்லாதார் அதைப் பிடித்துஎடுத்துக்கொள்ளுகின்றனர். திருவனந்தபுரம் கோயிலில் ஏராளமாக மணிகள் கட்டப் பெற்றிருக்கின்றன. அவைகளைப் பிராமணர்கள் அடித்துச் சுவாமி கும்பிடுகிறார்கள். பிராமணரல்லாதார் அவைகளைத் தொடக் கூடாது! மணியடித்துச் சுவாமி கும்பிட வேண்டியது என்ன விதியோ தெரியவில்லை. பிராமணரல்லாதார் கீழே விழுந்து நமஸ்காரஞ் செய்யக்கூடாது. பூஜாகாலத்தில் உள்ளே நுழையக் கூடாது! பிராமணர்கள்தான் பூஜாகாலத்தில் தெரிசிக்கலாம். கோளம் வானராசாரம் என்ற முதுமொழி அந்த நாட்டிற்கு மிகப் பொருத்தமானதேயாம்.

**எமபாதைக் கடவு:—** திருவண்ணாமலையில் கிரிப்பிரகாரத்தில் வடபாகத்தில் எமபாதைக்கடவு என்ற, இரண்டு மூன்று கற்களால் கூட்டப் பெற்ற கடவு ஒன்று உளது. அது ஏதோ ஒரு கட்டிடத்தின் சிதைந்த சிறு பாகமாகத் தெரிகிறது. அதிலே நுழைந்து வெளியே வருவோர்க்கு இயமனுடைய உபாதைகிடையாது என்றுபொதுஜனங்கள் கஷ்டப்பட்டு அதற்குள் நுழைந்து வெளியே வருகிறார்கள். கொஞ்சம் பெரிய பாங்கிப்பழப் பேர் வழிகளாக இருந்தால், அப்புறமும் போகமுடியாமல் இப்புறமும் வரமுடியாமல் தவிக்கிறார்கள். சில திருக்கோயில்களில் சண்டேசுரர் சந்நிதானம் வைரவர் சந்நிதானம் முதலியவற்றில், ஜனங்கள் தாங்கள் கட்டியிருக்கும் ஆடைகளிலிருந்து நூல் இழைகளைப் பிரித்து எடுத்துப் போட்டு விட்டுப் போகிறார்கள். அவ்விரண்டு சந்நிதானங்களிலும் நூற்குப்பை நிறைந்து விடுகிறது. இறந்த பின்னர் நூலேணியாக வந்து உதவி புரியும் எனக்காரணஞ் சொல்லிக் கொள்ளப் பெறுகிறது. இவைகளை யெல்லாம் மூடத்தனமான எண்ணங்கள் என்றுதான் சொல்ல வேண்டும்.

## ஊருணி நீர்.

கிராம வாசிகள் பெரும்பாலும் ஊருணி நீரினையே அருந்துகின்றார்கள். கிராமங்களி லுள்ள ஊருணிகளில் பல அசுத்தமாகவே யிருக்கின்றன. பொது ஜனங்கள், யானை தன் தலையிலேயே மண்ணை வாரி இறைத்துக் கொள்வதைப் போல், பலவிதமாக ஊருணிகளை அசுத்தப்படுத்திப் பலவகையான நோய்களுக்கு உள்ளாகின்றார்கள். அசுத்தமான—கண்ணுக்குத் தெரியாத புழுக்கள் நிறைந்த மண்டிநீரை அருந்துதலாலேயே, நரம்புச் சிலந்தி முதலிய பல வியாதிகள் கிராம வாசிகளைப் பெரிதும் துன்புறுத்துகின்றன. மனிதன் உயிர்வாழ்வதற்குத் தண்ணீர், காற்று, வெளிச்சம் முதலியன மிக இன்றியமையாதனவாம். இவைகளிலேதான் கிராமவாசிகள் போதிய கவனம் செலுத்துவதில்லை. எனவே, நோய்களும் அவர்களை விட்டு அகல்வதில்லை. அசுத்தப்படுத்தப் படாத தெளிவான நீரை அருந்துவதுதான் உடலுக்கு நல்லது ஆகும். நான்குபுறங்களிலும் எவ்விதமாகவும் அசுத்தப் படுத்தப் படாத—பூமிக்கு மேல் உயர்ந்த சுவர்களால் எழுப்பப்பெற்ற வாயினையுடைய கிணற்றுத் தண்ணீர்தான் சாப்பிடுவதற்கு முதல்தரமானதாகும். இரண்டாவது ஊருக்கு அப்புறத்தில் ஜனங்களால் அசுத்தப் படுத்தப் படாது, தக்க காவலோடு பாதுகாக்கப் பெறுகின்ற ஊருணிநீரை உட்கொள்ளலாம். ஊருக்கு நடுவனுள்ள ஊருணிகளில் தண்ணீர் எடுத்து உட்கொள்ளக் கூடாது. அவைகளில் ஜனங்கள் செய்யும் அசுத்தத்திற்கு ஓர் அளவில்லை! காலையிலும் மாலையிலும் ஊர் ஜனங்கள் பலர் திரளாக ஊருணிகளிலேயே கால் கழுவுகின்றார்கள். 'குடிக்கிற தண்ணீரல்லவா? அசுத்தப்படுத்தக் கூடாதே!' என்று ஒருவரும் நினைக்கிறதில்லை! தங்கள் காரியம் முடிந்தாற் சரி! இந்த பாகத்தில், வெளிக்குப் போகிறவர்கள் கையில் செம்பு எடுத்துக் கொண்டு போகிறதுமில்லை. யாராவது எடுத்துக் கொண்டு போனாலும், அவர்களை வைதிகர் என்று பலர் கேலி செய்கிறார்கள். காட்டிலிருந்து ஊருணிக்குத் தண்ணீர் வரும் வழியாகிய கால்வாய்களிலே ஆடவரும் பெண்டிரும் மலஜலங் கழித்துச் செய்யும் ஆபாசத்திற்கு ஓர் எல்லை யில்லை! ஊருணி அதிகாரிகள் கால்வாய்களின் இருபுறங்களிலும் முட்கம்பிகளால் அடைத்தல் வேண்டும். கால் கழுவதற்கு ஊருணிக் கரைகளில் பாத்திரங்கள் போட்டு வைக்க வேண்டும். காலையில் பல் தேய்ப்போர் ஊருணியின் உள்வாயிலிருந்து பல் தேய்த்து எங்கும் எச்சிலைத் துப்புகிறார்கள். பற்கம்புகளையும் சாம்பர்களையும் நெடுகப் போடுகிறார்கள். பலஊருணிகளில் ஸ்நானமும் நடை பெறுகிறது. கூலி வேலைக்காரர்கள் ஊருணியின் உள்வாயிலிருந்து சாதம் சாப்பிட்டு விட்டு, எச்சில்இலைகளை அங்கேயே போட்டு விட்டுப் போய்விடுகிறார்கள். ஊருணிக்குள் மாடுகளைத் தண்ணீர் காட்டும்பொழுது அவைகளின் எரு, சிறுநீர் முதலியவைகளால் ஊருணியை அசுத்தப் படுத்துகின்றன. தண்ணீர் எடுக்க வருகிற ஜனங்கள் பாத்திரங்களை ஊருணிக்குள்ளேயே தேய்த்து, ஊருணியிலேயே கழுவி அசுத்தப் படுத்துகிறார்கள். கூடிய வரையில் ஊருணிகளில் ஜனங்கள் அசுத்தஞ் செய்யாதவாறு நல்ல காவலர்களை ஏற்படுத்திப் பாதுகாக்க வேண்டும். ஊருணிகள்தான் கிராமவாசிகளின் உயிர்நிலையமாகும். பெரிய பொதுக்கிணறுகள் ஏற்படின் கிராமங்களில் நோய் தலை காட்டாது. இசையாத பக்ஷம் ஊருணி நீரைக் காய்ச்சிச் சாப்பிடுதல் நல்லதாகும். தண்ணீரைப் பற்றி ஜனங்கள் போதிய சிரத்தை எடுத்துக் கொள்ளுதல் வேண்டும்.

வாகீச பக்தன்.

## காவிரியார்கோயில் தேவஸ்தானம்.

கங்ஙஉ-ம் பசலி வரவு செலவு கணக்குள்.

——:o:——

| வரவு | ரூ | அ | பை |
|---|---|---|---|
| முன் கடன் | —எஉ,உசுசு | க0 | கூ |
| வரவு | சுஉ,அ௫0 | அ | க |
| | ஆ—கூசகசு | உ | 0 |
| செலவு | | | |
| கோயில் உள் சிப்பந்திச் செலவு | உசுசுங | கங | க0 |
| தினசரி படித்தரம் | ககூ0சுச | 0 | ௫ |
| விசேஷப் படித்தரம் | ககூ0க | எ | ௫ |
| உற்சவச் செலவு | கஙஙஉ௫ | ௫ | கூ |
| புதிய மராமத்து | எஎ | 0 | 0 |
| பாசான மராமத்து | கஙகூகூ0 | உ | உ |
| கட்டிட மராமத்து | ஙஎக0 | 0 | எ |
| காட்டு மராமத்து | க0உ | க0 | க |
| சில்லரை | சு௫௫ | க௫ | சு |
| மராமத்து சிப்பந்திச் செலவு | சங0உ | க | க |
| சர்வே செலவு | க0எங0 | கச | 0 |
| தீர்வை முதலியன | ச0௫௫ | எ | க |
| அரசாங்க பரிசீலனை கமிஷன் | உ0எஉ | ச | க |
| வரி வசூல் சிப்பந்திச் செலவு | கககஙககூ | ச | கக |
| நீதிமன்றச் செலவு | கஙகசு0 | அ | கூ |
| நிலம் வாங்கியது | கககசு௫ | 0 | 0 |
| சில்லரைச் செலவு | ஙஎ | அ | 0 |
| | ஆ க,0உ,ஙஉங | எ | அ |
| பசலி முடிவில் கடன் | —க,கக,எசக | கூ | அ |





## வின்ஸ்டன் சர்ச்சில்.

பிரிட்டிஷ் அரசியல் தேர்தலில் குறுகிய (கன்ஸர்வேடிவ்) கட்சியார் அரசாங்கத்தை வகிக்க வந்து விட்டமையால், இந்திய அரசாங்கக் கயிறு அநேகமாய் கனம் வின்ஸ்டன் சர்ச்சில் கையில் வருமென்று சொல்லப்படுகிறது. இவரது இராஜீய காரியங்களைப் பற்றிச்சிறிது கவனித்தால், இவர் கஅகூக ஆண்டிலிருந்து பார்லிமெண்டு சபைத் தேர்தலுக்கு நின்றிருக்கிறார். முதன் முதல் அவ்வருடத்தில் ஓல்டுஹாம் என்னுமிடத்துக்குப் பிரதிநிதியாக நின்றார். ககூ0அ முதல் ககூஉஉவரை டண்டி என்னு மிடத்துக்குப் பிரதிநிதியாக விருந்தார். ககூஉஉ-ல் அவர் தன் ஸ்தானத்தை இழக்கும்படி நேரிட்டது. அதிலிருந்து சர்ச்சில் பார்லிமெண்டு அங்கத்தினரா யிருக்க வில்லை. சென்ற வருடம் நடந்த பொதுத் தேர்தலில் மேற்கு லீஸ்டர் பகுதியில் தோற்றுப் போனார். இவ்வருடம் நடந்த வெஸ்டுமின்ஸ்டர் தேர்தலிலும் தோற்றுப் போனார். இப்போது நடை பெற்ற பொதுத் தேர்தலில் ஜெயமடைந்து பார்லிமெண்டிக்குத் திரும்பி வந்திருக்கிறார்

சொ. முருகப்ப செட்டியாரால்(பத்திராதிபர்) காரைக்குடி "குமரன்" அச்சுக்கூடத்தில் அச்சியற்றிப்பிரசுரிக்கப்பெற்றது.

